யிருக்குமென்பதைப் பெற்றோர், பள்ளிக்கூட உபாத்தியாயர் இருவர்க்கும்பட வற்புறுத்த எண்ணினோம். அவ்வெண்ணப் படி, இங்கு சிறுகுழந்தைகளுக்கு விசாரிக்கும் சக்தியுண்டாகும்படி செய்வதற்கு அஸ்பதமான இரண்டு சிறு சம்பாஷணைகளைப் பிரசுரிக்கிறோம். இவ்விரண்டும் தமிழ் நாடெங்கும் வழங்கிவரும் பழமையான குழந்தைப் பேச்சுகள். சிறு குழந்தைகளுக்கு விசாரணை சக்தியுண்டாகச் செய்ய வேண்டுமென்றால் அது எப்படி சாத்தியம்? அவர்களுக்கு என்ன தெரியும்? என்று பலர் முதலில் இந்த வழியில் ஐயமுற்று ஆக்ஷேபஞ் சொல்வார்கள். அப்படி அவர்கள் சொல்வது, குழந்தைகளின் மனோபாவ இயல்பை யறியவெண்ணாத் தோஷத்தாலன்றி வேறல்ல. அவர்கள் தங்களிடத்துள்ள தெரியாமையை யுணர்ந்து கொஞ்சம் விஷய ஆராய்ச்சி செய்து யோஜிக்க மனம் வைப்பரேல் பின்வரும் சம்பாஷணையினால் குழந்தைகள் மனதிலுண்டாகும் பயனை அறிந்து கொள்ளக்கூடியவராவர். "அம்புலிமானே" என்ற முதல் விஷயம் ஒரு சிறு குழந்தை நிலாவெறிக்கும்பொழுது ஆகாயத்தை அண்ணாந்துப் பார்க்க அங்கே சந்திரன் ஓடுகிறாப்போல் காணும் தோற்றத்தைக் கண்டு அந்தச் சந்திரனோடு பேசுகிற பாவனையாகச் சொல்லும் பேச்சு. குழந்தைகளை வைத்துக் கொண்டு விளையாட்டுக் காட்டும் தாயோ, மற்றவர்களோ, குழந்தைக்குச் சந்திரனைக் காட்டி அது ஓடுகிறதைக் கண்டு "எங்கே போறே" என்று கேட்கச் சொல்லிக்கொடுத்து, உடனே கேள்வியும் பதிலுமாக பேச்சைச் சொல்லிக் கொடுத்துக் கொண்டுபோவார்கள். இதனால் குழந்தைக்கு நிலாக்காலத்தில் ஆகாயத்தினழகையும் சந்திரனது சந்தோஷ முண்டுபண்ணும் தோற்றத்தையும் கண்டு மகிழக் காட்டிக் கொடுப்பதோடு, குழந்தை சந்திரனோடு பேசுகிற பாவனையாகச் சொல்லும் பேச்சில் அக்குழந்தை மனோபாவ சக்தியைத் தூண்டிவிட்டு, காரண காரியங்களைப்பற்றி விசாரிக்க ஒரு ஆசையுமுண்டுபண்ணும்படி யிருப்பதையறிந்துணரத் தக்கவர்கள் இப்பாட்டைக் கற்பித்தவர்களுடைய சூக்ஷ்மபுத்தியைக் கண்டு வியக்காமலிரார். ஆகாயத்தில் சந்திரனைக் காட்டவே, சந்திரன் ஆகாயத்தில் போய்க் கொண்டிருப்பதைக்கண்டகுழந்தை "எங்கேபோறே" என்று கேட்கிறது. அதற்கு சந்திரன் "மலையான் குளத்துக்குப் போகிறேன்" என்று சொல்ல, அங்கு ஏன் போகிறாய், என்று குழந்தை கேட்கிறது; குளத்திற்கு "மண்ணெடுக்கப் போறேன்" என்று பதில்சொல்ல, அதன்மேல் "மண் என்னத்திற்கு ? என்று குழந்தை கேட்கிறது; "செப்புச் செய்ய" என்று பதில் கிடைத்தும் அதோடு நிற்காமல் குழந்தை தனக்கு இயல்பாயமைந்துள்ள ஆராய்ச்சி சக்தி தூண்டப்பட "செப்பு என்னத்திற்கு ?" என்று மேன்மேலும் கேட்டுக்கொண்டு போகிறது; கடைசியில் "குழந்தைஎன்னத்திற்கு?" என்கிற கேள்வி பிறக்கும்பொழுது அதற்குச் சொல்லும் விடை குழந்தை தன் அனுபவத்தில் அறிந்ததாயிருப்பதால், அது கேட்டுக் கொண்டுபோன கேள்விகள் அதுமட்டில் திர்ப்திகரமாக முடிந்ததைப்பற்றிச் சந்தோஷித்துக் குதித்து விளையாட ஆரம்பிக்கிறது பாருங்கள்.

இரண்டாவது விஷயமான "காகம் காகம் எங்கே போனாய்?" என்பதும் இதே மாதிரியானதுதான். இராவில் சந்திரனைக் காட்டிப் பேச்சுக் கொடுத்தால், பகலில் காகம் ஒன்று எதிரே இருப்பதைக்காட்டி அதோடு குழந்தை பேச்சுக்கொடுக்கும் மாதிரி செய்யப்பட்டுள்ளது இந்தப் பேச்சு. இதில் காகம் சற்று எதிரே உட்கார்ந்து ஓடி ஓடிப்போய் பின்னும் வருவதால், அதை நோட்டமிட்டு "காகம் காகம் எங்கே போனாய்?" என்ற முதற்கேள்வி போடப்பட்டிருக்கிறது. மேலே காட்டிய சாத

கங்களோடு குழந்தைகள் தங்கள் கண்முன் காணும் விஷயங்களை கோட்டமிட்டு அதன் மேல் விஷயமாராயக் கேள்விகள் போடும்படி பழக்குவிக்கப்படுவதும் இதில் நன்றாய்ப் புலப்படும். இவ்வளவோடு நாம் மேலே சொன்ன இரண்டு பாட்டுகளையும் கீழே பிரசுரிக்கிறோம். இந்த மாதிரி சிறுவர்கள் சொல்லும் பாட்டுகள் விளையாட்டுகளை யெழுதியனுப்பும் சிறுவர்களுக்கு அவர்களனுப்பும் பாட்டு நல்லதாயிருந்து எடுத்துக் கொள்ளப்பட்டால் அவர்களுக்குபயோகமான சிறு புஸ்தகம் ஒன்று இனுமளிக்கப்படும். இதை விவேகசிந்தாமணியை வாசிக்கும் நாட்டுப்புறத்துச் சிறுவர்கள் சிறுமிகளெல்லாம் கவனித்து அவரவர்களுக்குத் தெரிந்த பாட்டுகளை யெழுதியனுப்பி வெகுமதி பெறப்பார்ப்பார்களென்று நம்புகிறோம்.

I. "அம்புலிமானே."

அம்புலிமானே ஆடியசிற்றப்பா எங்கெங்கே போறே ?
மலையான் குளத்திற்குப் போறேன்.
ஏன் மலையான் குளத்திற்குப் போறாய் ?
மண்ணெடுக்கப் போறேன்.
மண் என்னத்திற்கு ?
செப்பு பண்ணுவதற்கு.
செப்பு என்னத்திற்கு ?
பணம் போட.
பணம் என்னத்திற்கு ?
மாடுவாங்க.
மாடு என்னத்திற்கு ?
சாணி போட.
சாணிபென்னத்திற்கு ?
வீடு மெழுக.
வீடு என்னத்திற்கு ?
பிள்ளை பெறுவதற்கு.
பிள்ளை என்னத்திற்கு ?
எண்ணெய்க் குளத்திலே துள்ளிவிளையாட
ஈச்சம்பாயிலே இருந்துவிளையாட
கோரைப்பாயிலே குந்திவிளையாட
தாழம்பாயிலே தவிழ்ந்து விளையாட
ஓலைப்பாயிலே ஓடிவிளையாட.

---

II. "காகம் காகம் எங்கேபோனாய் ?"

காகம் காகம் எங்கே போனாய் ?
இரைமேயப்போனேன்.
இரைபென்ன எடுத்தாய் ?
வைக்கோல் எடுத்தேன்.
வைக்கோல் என்ன செய்தாய் ?
மாட்டுக்குப் போட்டேன்.
மாடு என்ன கொடுத்தது ?
சாணி கொடுத்தது.
சாணிபென்ன செய்தாய்?
விரட்டி தட்டினேன்.
விரட்டி என்ன செய்தாய் ?
குயவனுக்குக் கொடுத்தேன்.
குயவன் என்ன கொடுத்தான்?
தோண்டிகொடுத்தான்.
தோண்டி என்னசெய்தாய் ?
கிணற்றில் போட்டேன்.
கிணறு என்ன கொடுத்தது ?
ஜலம் கொடுத்தது.
ஜலம் என்ன செய்தாய் ?
பூஞ்செடி மாஞ்செடிகளுக்கு வார்த்தேன்.
பூஞ்செடி மாஞ்செடி என்னகொடுத்தது ?
பூஞ்செடி பூவும் மாஞ்செடி மாம்பழமும் கொடுத்தது.

---

விநோதக் கூற்று.

உபாத்தியாயர்:—"மனக் கணக்கு. கேட்கிறவன் மட்டுமே பதில் சொல்ல வேண்டியது. கவனியுங்கள்: ஒருவன் கோதுமைமா 2-அணா 6-பை; சர்க்கரை 1-அணா 6-பை; நெய் 6-அணா; பாதுமைப் பருப்பு 6-பை; ஏலக்காய் 3-பைசா; இவை வாங்கினான். எல்லாம் சேர்ந்தால் என்ன ஆகும்? குப்பா! நீசொல்.

துப்பன்:—பேஷான அல்வா, ஸார்.

உபா:—(சிரித்து) எவ்வளவடா ஆகும் மடையா? என்ன ஆகுமென்று கேட்டேன்?

துப்:—கெட்டத் தட்ட ஓர் சேர் ஆகுமா, ஸார்?

உபா:—கழுதை! எப்போதும் தன்பண்டிலேயே எண்ணம். பணம் எவ்வளவடா ஆகும் என்றால்?

துப்:—அல்வா மட்டும் நன்னு இருந்தால் சேர் ரூ 1—8—0, ஸார். "விவேகோதயம்."

## CHARACTER SKETCH : SIR THOMAS MUNRO.

### குணவலி விளக்கம்.

ஸர் தாமஸ் மன்ரோ.

(வைகாசிமீ சஞ்சிகை 52-ம் பக்கத் தொடர்ச்சி.)

இதுவரையிலும் ஏறக்குறைய 28-வருஷங்களாய்க் கொஞ்சமேனும் ஓய்வு ஒழிச்சல இல்லாமல் குடிகளுடைய நன்மையையே நாடி உழைத்து வந்ததில் இவருக்குத் தேகம் கொஞ்சம் பலஹீனமாகவே, தாய் தந்தையர் முதலானவர்களைப் பார்க்கச் சீமைக்குப் போக வேண்டுமென்று எண்ணமுண்டாயிற்று. ஆனல் இதுவரையில் தன் பெற்றோர்களை மறந்திருந்தாரோ ? இல்லை. அவர்களுக்கு வேண்டுமான பொருள் அப்போதைக்கப்போது அனுப்பிக்கொண்டிருந்ததோடுகூட, அவர்கள் வசிப்பதற்கு வசதியான ஓர் வீடும் வாங்கிக்கொடுத்து, வறுமையிலிருந்தும் விடுவித்துச் சௌக்கியமான ஸ்திதியில் வைத்திருந்தார். 1867-ஹு அக்டோபர்மீ தன் கலெக்டர் வேலையை ராஜினுமாக் கொடுத்துவிட்டுச் சீமைக்குப் பிரயாணமாய் அவ்விடம் 1868ஹு ஏப்பிரல்மீ போய்ச் சேர்ந்தார். சேர்ந்தும் அவர் ஆவலுடன் எண்ணிப்போன காரியம் கைகூடாமற போயிற்று. அவர் இந்தியாவைவிட்டுப் புறப்படும் சில மாதங்களுக்கு முன்னதாகவே அவர் தாயார் தேகவியோகமடைந்து விட்டாள். மன்ரூே அவர்கள் உத்தியோகத்தில் மேன்மேலும் பெருமைப்பட்டு வருவதை அதிக ஆவலுடன் கேட்டுக் களித்து வந்த அவா தகப்பனுரோ இப்போது விர்த்தாப்பியத்தால் மெய் தளர்ந்து மனேதிடனற்றவரா யிருந்தார். ஆகவே தன்து அருமைத் தாய் தந்தையர்ராடு குலாவிக் குதூகலிக்க வகையில்லாமற் போயிற்று. இவர் இங்கிலாந்தில் இருக்குங் காலத்தில் இந்தியாவில் நிலத்தீர்வை, நியாய விசாரணை, போலீசு முதலான முக்கியமான விஷயங்களை சரிவர நடத்த ஏற்பட்டுள்ள துரைத்தன விசாரணைகளைக் குறித்துப் பார்லிமெண்டில் கேள்வியுண்டாகவே, அவ்விடத்தில் தாமஸ் மன்ரூே அவர்களால் சொல்லப்பட்ட விஷயங்களே அவருடைய விஸ்தீரண நோக்கத்திற்காகவும், அவர் விடைகளின் தீவிர யுக்தி சாதுரியத்திற்காகவும் மற்றவர்கள் எடுத்துக்காட்டிய விஷயங்களைக் காட்டிலும் மேலாகக் கொள்ளப்பட்டன. இவர் சீமையில் 6-வருஷகாலம் இருந்த பிற்பாடு, இந்தியாவில் நியாய விசாரணை ஏற்பாடுகள் விஷயமாய்த் தீரவிசாரித்து அதைச் சீர்திருத்தும்படி பார்லிமெண்டாரால் ஏற்படுத்தப்பட்ட ஒரு கமிஷனுக்கு, அக்கிராசனுதிபதியாய் நியமிக்கப்படவே 1874-ஹு ஜூன்-மீ சீமையைவிட்டுப் புறப்பட்டு செப்டெம்பர்மீ சென்னை வந்து சேர்ந்தார். புறப்படுவதற்குச் சில மாதங்களுக்குமுன் இவருக்கு கலியாணம் ஆயிருந்தபடியால் மன்ரூே துரைசானியும் கூட வந்தார். மேற்குறித்த கம்மிஷனில் விசேஷ முயற்சி எடுத்துக்கொண்டு நியாய விசாரணையைக் குறித்த காலத்திற்குள்ளாகவே செய்து முடித்தார்.

பிற்பாடு, பூனவில் நடந்த உடன்படிக்கையின் பிரகாரம் பேஷ்வாவால் கம்பெனியாருக்கு விடப்பட்ட தென் மகாராஷ்டிர தேசத்தின ஓர் பாகத்திற்கு கர்னல் மன்ரூே கம்மிஷனராக அனுப்பப்பட்டார். டார்வாருக்குப் போய் வேலையை ஏற்றுக்கொண்ட கொஞ்சகாலத்திற்குள், பேஷ்வாவுடன் நடந்த உடன்படிக்கையின் பிரகாரம் 1817ஹு அக்டோபர்மீ சந்தூர் ராஜ்ஜியத்தைக் கைப்பற்றும்பொருட்டு அவ்விடத்திற்குப் படையெடுத்துப்போனர். இவர் வரவைக்கண்ட சந்தூர் ராஜன் இவரை தஞ்சமென்று அடையவே அவனிடத்தில் உடன்படிக்கை செய்துகொண்டு அவனைத் திரும்பவும் ராஜ்ஜியத்தில் ஸ்தாபிக்கவும ஏற்பாடு செய்தார். இதற்குள் பேஷ்வா மறுபடியும் போர் துவக்கினதால் அவன் நாட்டின் பேரில் மன்ரூே படையெடுத்துச் செல்லவேண்டியதாயிற்று. 1818ஹு ஜனவரிமீ இவர் பேஷ்வாவினுடைய அரணுன ஸ்தானங்களில்

முக்கியமானதான கடாக், தாமல், ஹூப்ளி முதலான இடங்களைக் கைப்பற்றிக்கொண்டார். பிற்பாடு ஏப்பிரல்மீ பேஷ்வாவின் முக்கிய ராணுவஸ்தலமாகிய பெல்காமையும், மேமாதத்தில் ஷோலாப்பூரையும் பிடித்துக்கொண்டார். ஷோலாப்பூர் பிடிபடவே பேஷ்வா மனம் தளர்ந்து கம்பெனியாரிடத்தில் அடைக்கலமானன். ஆகவே தென் மகாராஷ்டிரம் முழுவதும் கம்பெனியார் ஆட்சிக்குள் வந்துவிட்டது. மன்ரோ இந்த ராஜ்ஜியத்தைக் கைப்பற்றினதோடுகூட வெகு சீக்கிரத்தில் அவ்விடத்தில் நீதியான ஆட்சியும், குடிகளுக்குள் ஓர் அமைதியும் உண்டாக்கி அதிக கீர்த்திப்பிரதாபங்கள் பெற்றார். இவர்பட்ட சிரமத்தில் தேகசௌக்கியம் கெட்டு பலஹீனமடையவே தன்வேலையை ராஜீனமாக் கொடுத்துவிட்டு சீமைக்குப்போக பெங்களூர் மார்க்கமாய்ச் சென்னைக்குச் சென்றார். இப்போது இவருக்கு 'ஜெனரல்' பட்டமும அமைந்தது.

சென்னையை விட்டு 1819-ம் வருஷம் ஜனவரி மாதம் தாமஸ் மன்ரோவும், மன்ரோ துரைசானியும் புறப்பட்டுப்போனார்கள். போகும் வழியில் மன்ரோ சீமாட்டிக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. ஜூன் மாதக்கடைசியில் எல்லோரும் இங்கிலாந்தை அடைந்து தங்கள் சுயதேசமாகிய ஸ்காட்லாந்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள். இவருடைய கீர்த்தியோ இவருக்கு முன்னால் பார்லிமெண்டு சபைக்கு எட்டி, அவ்விடத்தில் இவருடைய சாமர்த்தியத்திற்காகவும், புத்திவலிமைக்காகவும் மிகவும் புகழ்ப் பெற்று ஹியூ எல்லியட்துரை யவர்களுக்குப் பிற்பாடு சென்னை கவர்னர் வேலைபார்க்கத் தகுந்தவர் இவரே என்று நிச்சயிக்கப்பட்டது. மன்ரோவுக்கு இந்தியாவுக்குப் புறப்படுமுன் 1818-ம் வருஷம் அக்டோபர் மாதம் 'கம்பானியன் ஆப் தி பாத்' (C. B.) என்னும் பட்டமும், 1819-ம் வருஷம் ஆகஸ்ட்டு மாதம் 'மேஜர் ஜெனரல்' என்னும் அந்தஸ்தும், கவர்னர் வேலையை ஏற்றுக்கொண்ட பிற்பாடு 'கே. ஸி. பி.' (K. C. B.) பட்டமும் கொடுக்கப்பட்டன. கம்பெனியின் 'டைரெக்டர்களால்' இவருக்குப் பிரயாண விருந்தளிக்கப்பட்டபோது, இவர் செய்த நன்மைகளையும், இங்கிலாந்துக்குச் செய்த உபகாரங்களையும் குறித்து அப்போது முக்கிய அத்தியக்ஷராயிருந்த கானிங் துரை நன்கு மதித்துப்பேசினர். ஸர் தாமஸ் மன்ரோவும், மன்ரோ சீமாட்டியும் குழந்தையுடன் 1819-ம் வருஷம் டிசம்பர் மாதம் சீமையை விட்டுப்புறப்பட்டு பம்பாய் மார்க்கமாய் 1820-ம் வருஷம் ஜூன் மாதம் 8-ம் தேதி சென்னைவந்து சேர்ந்து கவர்னராகவேலையை ஒப்புக்கொண்டார்.

"குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில்"

என்றபடி, இவர் சென்னை ராஜதானிமுழுவதும் குற்றங்கள் கண்டிக்கப்பட்டு சரியான நியாயம் கிடைக்கும்படியாய் அங்கங்கே நியாயஸ்தலங்களை ஸ்தாபித்தார். உள்நாட்டு அதிகாரம் சீராய் நடந்துவரும்படி அந்தந்த வேலைக்குத் தக்கபடி ஐரோப்பியரையும் இந்துக்களையும் நியமித்துப் பார்த்துவந்தார். இந்துக்களுக்கு இங்கிலீஷ்த் துரைத்தனத்தில் பிரியம் உண்டாவதற்காக அவர்கள் தொன்றுதொட்டு அனுசரித்துவரும் கொள்கைகளிலேயும், வழக்கங்களிலேயும் பிரவேசிக்காமல் இருந்ததோடுகூட அவைகளைப் பாதுகாத்தும் வந்தார். மேலும் இவர் இந்துக்கள் மதவிஷயத்திலே பிரவேசித்தவரல்ல. 1822-ம் வருஷத்தில் பல்லாரியில் இருந்த 'சப்கலெக்டர்' தன் உத்தியோக அதிகாரத்தைப் பாதிரித்தொழிலில் செலுத்தி அவ்விடத்து ஜனங்களை கிறிஸ்தவர்களாக்க முயன்றபோது அந்தக் கலெக்டரைக் கண்டித்து அவர் செய்யப்புகுந்தது தகாதசெயலென்றும், மத சம்பந்தமான விஷயங்களில் துராகிர்தமாய்ப் பிரவேசிப்பது பலதீமைகளை விளைவிக்கும் கொடிய கலகங்களுக்கிட முண்டாக்குமென்றும் வற்புறுத்தினர். சர்க்காரைச்சேர்ந்த எல்லா இலாகாக்களிலும் விசேஷ சீர்திருத்தங்கள் செய்து அங்கிலேய துரைத்தனத்தை பலரும் மெச்சிப்

புகழும்படி செய்தார். சுதேசிகளின் வித்திபா பிவிர்த்தியின் பொருட்டு ஒவ்வொரு ஜில்லாவிலும் இந்துக்களுக்காக ஒரு பாடசாலையும், மகம்மதியருக்காக ஒரு பாடசாலையும், ஒவ்வொரு தாலூக்காவிலும் ஒரு பாடசாலையும் ஏற்படுத்தினர்.

"முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்."
"கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கு
முடையானும் வேந்தர்க் கொளி."

இக்காலத்தில் முக்கியமான இடங்களுக்கெல்லாம் ரயிலும், நல்லபாதையும் இருப்பதால் வெகு சுலீசாய் பிரயாணம் செய்யலாம். முற்காலத்திலோ அப்படியல்ல. நல்ல சாலைமுதலான தொன்றுமில்லாமல் சாமானிய வண்டிகளிலேயே வெயிலிலும், காற்றுமழையிலும் அடிபட்டு யாத்திரை செய்யவேண்டியதாயிருந்தது. அப்படியிருந்தும் ஸர் தாமஸ் மன்றோவுக்கு ராஜதானிமுழுவதும் அடிக்கடி சுற்றிப் பார்த்து அங்கங்குள்ள குறைகளைத் தவிர்ப்பதில் வெகு பிரியமானதால் அவற்றையெல்லாம் பாராட்டவில்லை. இவர் 1821-ம் வருஷம் தான் முதலில் கலெக்டராயிருந்த 'பாராமகா' லுக்குப்போய் விசாரணைசெய்துவந்தார். 1822-ம் வருஷம் சென்னப்பட்டணத்திலிருந்து நெல்லூர் மார்க்கமாய் கஞ்சம் ஜில்லாவுக்குப்போய் திரும்பி விஜயநகரம், வெங்கிடகிரி, காளஹஸ்தி ராஜாக்களுக்குப் பேட்டி அளித்து வந்தார். 1823-ம் வருஷம் கடப்பை, பல்லாரி முதலான ஜில்லாக்களில் சுற்று விசாரணை செய்தார்.

1824-ஹு முதல் 1826-ஹு வரையில் நடந்த பர்மாயுத்தத்தில் தாமஸ் மன்றோ அவர்கள் சென்னப்பட்டணத்திலிருந்து பட்டாளம், எருது, படகு, கப்பல் இன்னும் மற்றும் வேண்டிமானவைகளெல்லாம அவ்விடத்திற்கு அனுப்பி பங்காள கவர்ன்மெண்டாருக்கு உதவி செய்தார், மேலும் அந்த யுத்தத்திற்கு வேண்டிய யுக்தி ஆலோசனைகளைக்குறித்து கவர்னர் ஜெனரலாயிருந்த அம்ஹெர்ஸ்ட் பிரபுவுக்கு அடிக்கடி கடிதமூலியமாய் எழுதிவந்தார். போரும் அனுகூலமாய் முடியவே சென்னை கவர்னராகிய ஸர் தாமஸ் மன்றோ அவர்கள் புரிந்த பேருதவிக்காக அவருக்கு 'பாரன்' (Baron) என்னும் பட்டம் கொடுக்கப்பட்டது. இதுவுமல்லாமல் அடுத்த முறை கவர்னர்-ஜெனரல் வேலையை இவருக்கே கொடுப்பதாகத் தீர்மானமும் செய்யப்பட்டது.

இவருடைய தேகஸ்திதி பலக்குறைவுபட்டு வந்ததால் 1826-ஹு கவர்னர் வேலையை ராஜீனாமக்கொடுத்துவிட்டு சீமைக்குத் திரும்பிப் போவதற்காகக் கம்பெனியாரை எழுதிக் கேட்டுக்கொண்டார். இதற்குள் 1823ஹு செப்டெம்பர்மீ பிறந்த இவர் இரண்டாவது குழந்தைக்கு தேகஸ்திதி அனுகூலமில்லாதிருந்ததால், சௌக்கியத்திற்காக மன்றோ சீமாட்டி குழந்தையுடன் முன்னதாகவே சீமைக்குப் போகவேண்டியதாயிற்று. (ஐயோ பாவம் !! அடுத்த வருஷத்திலேயே மன்றோ பிரபு இந்த இந்தியா மண்ணுக்கிரையானதால், மன்றோ சீமாட்டிக்குத் தன் நாயகனைத் திரும்பவும் பார்க்க வகையில்லாமற்போயிற்று.) 1826-ஹு, இவர் செங்கல்பட்டு, தென் ஆற்காடு, தஞ்சாவூர், திருச்சிறைப்பள்ளி, மதுரை, திருநெல்வேலி, கோயமுத்தூர் ஜில்லாக்களைச் சுற்றிப் பார்த்துக்கொண்டு நீலகிரி வந்துசேர்ந்தார். பின்பு நீலகிரியிலிருந்து பெங்களூர் மார்க்கமாய் காவேரியின் நீர் வீழ்ச்சியைக் கண்டுகளித்து பட்டணம் போய்ச்சேர்ந்தார். தன் அதிகாரத்தை ஏற்றுக்கொள்ள மற்றோர் கவர்னர் வரத் தாமதப்படுமென்று அறிந்து கடைசித் தடவையாய் கடப்பை, பல்லாரி ஜில்லாக்களுக்குப் போய்ப்பார்த்து வரும்படி 1827ம் வருஷம் மேமீ சென்னையிலிருந்து பிரயாணப் பட்டார். அனந்தப்பூரில் சிலகாலமிருந்த பிற்பாடு கவர்னரும் பரிவாரங்களும் ஜூலைமீ 4-உ குத்திக்கு வந்துசேர்ந்தார்கள். இவ்விடத்தில், அவருடன் வந்த சிப்பாய்களில் அனேகர் வாந்திபேதி என்னும் கொள்ளை நோயால் மடிந்தார்கள். மறுதினமே கவர்னர

வர்கள் அவ்விடம்விட்டுப் புறப்பட்டு கர்நூல் ஜில்லாவைச்சேர்ந்த பள்ளிகொண்டா வுக்கு 6-உ வந்து சேர்ந்தார். வந்துசேர்ந்து கொஞ்ச நேரத்திற்கெல்லாம் திடீரென்று உபாதி கண்டு, தென் இந்தியாவுக்கு ஓர் பேருபகாரி யாயிருந்த இச்சீமானும் இக்கொள்ளை நோய்க்கு அன்றையதினம் இராத்திரி 9½-மணிக்கெல்லாம் இரையானர். உடனே அவர் பிரேதம் குத்திக்குக் கொண்டுபோகப்பட்டு அவ்விடத்து அழகிய மலையின் கீழுள்ள அங்கிலேயக் கல்லறை முற்றத்தில் சேமிக்கப்பட்டது. பிற்பாடு இதை 1831ஹு ஏப்ரல்மீ மறுபடியும் திறந்தெடுத்து, சென்னப்பட்டணம் கொண்டுவந்து செண்ட் ஜார்ஜ் கோட்டைக்குள் இருக்கும் செண்ட்மேரி கோவிலில் கவர்னர் பீடத்திற்கு எதிரே அடக்கம் செய்ப்பட்டது. இதற்கருகாமையில் மன்றோ சீமாட்டியால் ஒரு சித்திரபீடமும் அதன்பேரில் மன்றோபிரபுவின் மார்பளவுகற்சிலையும், ஞாபக சின்னமாய் ஏற்படுத்தப்பட்டது.

மன்றோ பிரபுவின் மரணசமாசாரம் சென்னைக்கு எட்டவே அங்குள்ளோர் அனைவரும் தங்கள் உற்றார் இறந்ததாகவே மதித்து விசனமுற்றார்கள். துரைத்தனத்தாரோ 1827-ம் வருஷம் ஜூலை மாதம் 9-ம் தேதி பிரசுரித்த சர்க்கார்ப் பத்திரிகையில் மன்றோ பிரபுவின், விசேஷபுத்தி யூகத்தைக்குறித்தும், சிறப்பான சாமர்த்தியத்தைக் குறித்தும், விடாமுயற்சி, சற்குணம், காருண்யம் முதலாகிய குணங்களைக் குறித்தும் வெகுவாய்ச் சிலாகித்து எழுதி அவர் மரணத்தால் நாட்டுக்கு உண்டாகிய பெருநஷ்டத்தைக்குறித்து மிகவும் வருத்தப்பட்டார்கள். பள்ளிகொண்டாவில் இந்தச் சீமான் உயிர்துறந்த இடத்தில் துரைத்தனத்தார் அவர்ஞாபக சின்னமாக ஒரு தோப்பும் துரவும் ஏற்படுத்தினார்கள். குத்தியிலோ மன்றோ அவர்கள் பேரால் ஒரு குளமும், பெரிய சத்திரமும் கட்டினார்கள். இச்சத்திரத்தில் வெகுகாலம் வரையில் அன்னதானம் செய்து வந்தார்கள். ஸர் மார்ட்டின் ஷீ (Sir Martin Shee) என்னும் சிற்பியால் சித்திரிக்கப்பட்ட அவர் படம் ஒன்று அதில் மாட்டப்பட்டிருப்பதை இன்றும் காணலாம். சென்னை 'ரெவினியூ போர்ட்' கச்சேரியிலும், பல்லாரி, கடப்பை முதலான இடங்களிலுள்ள கச்சேரிகளிலும் இவர் படத்தைப் பார்க்கலாம். நீதிமானும் பரோபகாரியும், கபடமில்லாதவரும், பச்சாதாப குணமுள்ளவருமான இந்தப் பிரபுவின் மரணத்தால் உண்டான துக்கத்தை வெளியிடுவதற்காகவும், தங்களுடையசீர்திருத்தத்திலும், நன்மையிலும் முக்கிய கருத்துள்ளவராய் உழைத்துவந்த இவருடைய ஞாபகம் என்றும் நிலைநிற்பதற்காகவும் ஏதாவது ஏற்பாடு செய்யக்கருதி சென்னை நகரவாசிகள் அனைவரும் ஒரு பெருஞ்சபை கூடினார்கள். அவர் பட்ட பரிசிரமத்திற்காக அவர் பெயர் என்றும் அழியாப் புகழ்பெற்றோங்கும்படியாய் அவருடைய பிரதிமை ஒன்று நிருமாணிக்கப்பட்டு அனைவரும் பார்த்துக் களிக்கும்படியான இடத்தில் ஸ்தாபிக்கப்படவேண்டுமென்று எல்லோரும் ஏகோபித்த மனதாய்த் தீர்மானித்தார்கள். இதன் பிரகாரம், சீமையில் அக்காலத்தில் அதிக கீர்த்திபெற்ற சிற்பியாகிய ஸர் பிரான்ஸிஸ் சான்டிரி (Sir Francis Chantrey) அவர்களால் சென்னை நகரவாசிகளின் வேண்டுகோளின்படி மன்றோ பிரபு குதிரையின்பேரில் வீற்றிருக்கும் வண்ணமாய் பிரதிமை ஒன்று நிருமாணிக்கப்பட்டு 1839ஹு சென்னைக்குக் கொண்டுவரப்பட்டது. இது அந்த வருஷம் அக்டோபர் மாதம் 23உ விசேஷ வைபவத்துடன், மேலே விவரமாய் எடுத்துச்சொல்லப்பட்டிருக்கும் சென்னையில் அதிக நேர்த்தியான காட்சியமைந்த பாகமாகிய தீவில் ஸ்தாபிக்கப்பட்டது.

இது வரையில் ஸர் தாமஸ் மன்றோ அவர்களுடைய சரித்திரத்தைப் பற்றிச்சொன்னோம். அடுத்த சஞ்சிகையில் மன்றோ பதுமை எவ்வகைப் பொருளால் ஆக்கப்பட்டுள்ளதென்பதையும், அதை நிருமித்த சிற்பியின் சரித்திரத்தையும் சுருக்கமாகக் கூறுவோம்.

## ON DEBT.
## கடன்.

(வைகாசிமீ சஞ்சிகையின் தொடர்ச்சி.)

ஒருவன் வருந்தித் தேடிய பொருள் அவனுக்குத்தான் உரியது. அதை மற்றொருவன் வாங்கிக்கொண்டால் அதைத் திரும்பிக் கொடுப்பதற்கு அவன் கடமைப்பட்டிருக்கிறான். ஏனென்றால் அதைத்தேடும் விஷயத்தில் இவன் எள்ளளவும் பாடுபடவில்லையல்லவா? இப்படியிருக்க சிலர் இப்போது நாம் வாங்கிக்கொண்டால் பின் நாம் தேடும்பொழுது திருப்பிக்கொடுக்கலாம் என்ற எண்ணத்துடன் வாங்குகிறார்கள். திருப்பிக்கொடுக்க முடியாமற்போனாலும் போகலாம். அப்பொழுது நாமாகத் தேடாத ஒரு பொருளை நாம் அனுபவித்தோமே அது தவறல்லவா என்ற எண்ணம் உண்டாகும். இப்படிக் கடன் வாங்குவதற்கும் திருடுவதற்கும் என்ன வித்தியாசம்? பைசா கடன் வாங்கினவன் பவுன் கடன் வாங்குவதற்கும் அஞ்சான். காணிக்கு வந்ததுதானே கோடிக்கும் வரும். "கடனுண்டு வாழாமை காண்டலினிதே." காற்டணம் கடனிருந்தாலும் காத தூரம் நடந்தாவது தீர்க்கவேண்டும் என்பதை மறக்கக்கூடாது. இராப்பட்டினி கிடந்தாலும் கிடக்கலாம் அரைப் பணம் கடன் மாத்திரம் வைக்கக்கூடாது. ஏழைகளாக இருப்பதில் யாதொரு குற்றமுமில்லை. கடன் வாங்கினால் எப்பொழுதும் மடியில் நெருப்பைக் கட்டிக்கொண்டு தானிருக்கவேண்டும். எவ்வளவோ ஏழைகள் மரியாதையான காலக்ஷேபம் செய்வதைப் பார்த்திருக்கிறோம். எவ்வளவு பணக்காரனாயிருந்தாலும், கடன் காரனென்றால் ஊராருக்கெல்லாம் அருவருப்பாகவேயிருக்கும். சில மூட ஜனங்களுக்கு கடன் வாங்குவதில் பைத்தியக்காரத்தனமான சந்தோஷமுண்டு. "கடனில்லாத கஞ்சி கால் வயிறு" என்பது அவர்கள் வேதவாக்கு. அவர்கள் "எரவனு சொம்மு பருவுகுசேடு"* என்ற தெலுங்குவசனத்தை யறியார்கள் போலிருக்கிறது. கடன் வாங்கியும் பட்டினியா என்று சில ஜனங்கள் கைகொண்டமட்டும் கடன் வாங்கத்தலைப்படுகிறார்கள். இவர்கள், மயிலிறகைப்போர்த்து மயிலினத்தோடு சேர்ந்த வான்கோழி, சேர்ந்த சண்டையில் தன் சொந்த இறகையும் இழந்து மொட்டையாய் நின்றதுபோல், தங்களுக்கு ஏற்கனவேயுள்ள சிறிது பொருளையும் இழந்து திண்டாடுவார்கள் என்பதற்குச் சந்தேகமும் உண்டோ? வரும்படிக்கு மீறிச் செலவழிப்பதே நம்மவர்களுக்கு இப்பொழுது ஏற்பாடாயிருக்கிறது. "திரி துவட்டுவதற்கு எண்ணெயில்லை, திரிசிராப்பள்ளிவரை யிரட்டை தீவட்டி போடடா" என்கிறார்கள். பொருளைத் தேடுவது கஷ்டமல்ல. அதை வகையறிந்து செலவிடுவதுதான் கஷ்டம். அநேகர் வீண் செலவு செய்யாமலிருந்தால் வறுமை யென்பதையே அறியமாட்டார்கள். இக்காலத்துள்ளவர்கள் அநேகர் தங்கள் தாய் தந்தைகள் சாப்பிட்டமாதிரி தாங்கள் சாப்பிடுவது கௌரவக்குறைவென்று கண்டதையெல்லாம் வாங்கிக் கடனாளியாகிக் கடைசியில் பிச்சையெடுப்பதும் நாம் காணுக்காட்சி யல்லவே. பாய் நீளமறிந்தல்லவா கால் நீட்டவேண்டும். கடனாளிகள் பொய் சொல்லாமல் முடியாது. கொடுக்கிறேன் என்று சொல்லும் தினத்தில் கொடுக்கமுடியாதென்று மனதாரத் தங்களுக்குத் தெரியுமானாலும் இன்றைக்கென்றும் நாளைக்கென்றுமே சொல்லிக்கொண்டு வருவார்கள். கடைசியில் அது இல்லையென்பதற்கடையாளமாய் முடிகிறது. கடன் என்பது ஒரு நரகக்குழி. அதில் விழுந்து தப்பித்துக்கொள்ளுகிறவன் பாக்கியவந்தனே. ஆனால் அதில் விழாமலே ஜாக்கிரதையாயிருப்பவன் தான் எல்லா மனிதர்களிலும் உத்தமபுருஷன்.

* "இரவல் நகை சுமைக்குக்கேடு."

கடன் பட்டார் நெஞ்சம் மிகவும் சலங்கியிருக்கும் என்பதை யுட்கொண்டுதான், இராவணன் இராமருடன் சண்டைசெய்து தோல்வியடையும் சமயத்தில் இராவணனுடைய மனநிலைமையைக் குறித்துச் சொல்லும்பொழுது "கடன் பட்டார் நெஞ்சம்போற் கலங்கினன் இலங்கை வேந்தன்" என்றார் கம்பநாட்டாழ்வாரும். கடனில்லாதவனே தன்ரமகன். தங்களுக்கு வேண்டாத சாமான்களானாலும் சரசமாக வருகிறதென்று வாங்கத்தலைப்பட்டால் வெகு சீக்கிரத்தில் தங்களுக்கு அதியவசியமான சாமான்களைச் சபதமாக விற்க நேரிடும் என்பது நிச்சயம். கடன் வாங்கி ஜனங்களை வஞ்சனைசெய்து பணக்காரனாக முடியுமென்றால், கடல் நீரிலிருந்தும் கற்கண்டு காய்ச்சலாம். சிலர் ஜீவனத்துக்கு வழியேதும் இல்லாவிட்டால் கடன் வாங்கிக் கடன் கொடுத்து அதினல் ஜீவிக்கிறதைக் காண்கிறோம். நூற்றுக்கு ஆறு ரூபாய் வீதம் வட்டிக்கு வாங்கிப் பணத்தை வைத்துக்கொண்டு மாதம் ஒன்றுக்கு ரூபாய்க்கு அரையணு வீதம் வட்டிவாங்கி வயிறு வளர்ப்பவர்கள் எவ்வளவோ பேர். வட்டிக்காக ஆசைப்பட்டு சில்லரையாகக் கொடுக்கும் கடன்காரர்கள் திருப்பிக்கொடுக்கச் சக்தியற்றவர்களாய் விட்டால் இவன் பாடு அம்பலந்தான். கடன் வாங்கிக் கடன் கொடுத்தவனும், மரமேறிக் கைவிட்டவனும் பிழைப்பதுண்டோ? ஆனால் கடன்வாங்கிக் கடன் கொடுப்பதே தவறு என்று சொல்ல வரவில்லை. கைத்தொழிலாளிகள் முதலில்லாமல் வருந்தி நம்மைப் பணம் கேட்டு நம்மிடமும் இல்லாவிட்டால், நம்மை நம்பிக் கொடுக்கக்கூடியவர்களிடம் வாங்கி உதவிசெய்வது எல்லாவிஷயத்திலும் மேலானது. கைத்தொழிலாளிகளை நம்பிக்கொடுக்க சிலர் பிரியப்படாமல் நம்மிடம் கொடுக்கப் பிரியப்படலாம். நமக்கு கைத்தொழிலாளிகளிடம் நம்பிக்கையிருந்தால் அவர்களிடம் கடன் வாங்கி இவர்களுக்கு உதவி செய்வதனல் முத்திறத்தாரும் லாப மடையக்கூடும் இந்தத் தத்துவத்தின்பேரில்தான் தற்காலத்திய 'பாங்கிகள்' என்னும் திரவியசேகர நிதிகள் ஏற்பட்டிருக்கின்றன.

ஜனசமூகத்துக்கு நன்மைசெய்யும் விஷயத்துக்காக, பலரிடமிருக்கும் சிறு பொருளையெல்லாம் ஒரு வர்த்தகச் சங்கத்தார் கடனாக வாங்கிச் சரியான விஷயத்தில் உபயோகப் படுத்தினல் எவ்வளவோ நன்மைகள் செய்ய முடியுமே. நமது தேசத்தில் இப்போது ஏற்பட்டிருக்கும் இருப்புப்பாதைகளும், கப்பல் வியாபாரமும், துணி, காகிதம், சர்க்கரை முதலிய செய்யும் இயந்திரங்களும் கடன் இல்லாமல் முடியுமா. இவ்வகையான வர்த்தக சங்கங்களும் கடன் கொடுப்பதில் நம்பிக்கையுமிருந்தால்தான் தேசம் விருத்தியடையும். இதுதான் நமது தேசத்துக்கும் ஐரோப்பிய தேசங்களுக்குமுள்ள வித்தியாசம். உணவுக்குரிய தானிய விளைவு விஷயத்தில்தான் மிகுந்த முயற்சி முதலில் எடுத்துக்கொள்ளவேண்டும். நம் தேசத்துக்குடிகளுள் அநேகருக்கு ஒரு ஏர் மாடு வைத்துக்கொள்ளக்கூடக் கைம் முதலில்லாமலிருக்கிறது. மழை பேய்ந்தால் ஈரம் போய்விடுகிறதே என்று கடன் கொடுப்பதற்கு எப்பொழுதும் ஆயத்தமாயிருக்கும் நாட்டுக்கோட்டைச் செட்டிகளிடம் ஓடுகிறார்கள். இவர்கள் கடன்கொடுப்பதற்குப் பின்னிடுகிறதேயில்லை. தங்களிடம் ஒருவன் கடன் வாங்கிவிட்டால் அவனை அட்டை உறிஞ்சுகிற மாதிரி உறிஞ்சுவிடுகிறார்கள். இவர்கள் வெகு சரசமான வட்டிதான் வாங்குகிறது. உழுகிறவன் கணக்குப் பார்த்தால் உழக்குக்கூட மிஞ்சாது. இதையெல்லாம் அறிந்து தான் நமது துரைத்தனத்தார் விவசாயக்காரர்களுக்குப் பூமியைச் செப்பனிடவும், உழவுமாடுகள் வாங்கவும் குறைந்த வீதத்துக்குப் பணம் கொடுத்து கொஞ்சம் கொஞ்சமாக வசூலிக்கிறார்கள். இதைவிட நல்லமாதிரியாக உதவி செய்ய வேண்டுமென்று நமது துரைத்தனத்

தார் விவசாயபாங்கிகள் ஏற்படுத்த வேண்டு மென்று மிஸ்டர் நிக்கல்ஸன் துரையவர்கள் பல வருஷங்களுக்கு முன் ஐரோப்பாவிலுள்ள அம்மாதிரியான பாங்கிகளைப் பார்வையிட்டுத் தெரிவிக்கும்படி கேட்டார்கள் அப்படியே சில் ஏற்பாடும் செய்து வருகிறார்கள்.

சிலர், ராஜங்கத்தாரே கோடி கோடியாகக் கடன் வாங்குகிறார்களே! அரசன் எவ்வழி யவ்வழி குடிகள்; நாம் ஏன் கடன் வாங்கக் கூடாது? என்று வாதாடலாம். அரசாட்சி யார் எந்தக்காரியத்தை யுத்தேசித்து முடிக்கக் கடன் வாங்கினார்களோ அதே மாதிரி யான காரியம் செய்ய நாம் ஏற்பட்டுக்கொண்டால் நாமும் கடன் வாங்கலாம். அரசாங்கத்தார் கடன் வாங்கிச் செய்யும் காரியங்கள் எவ்வளவு லட்சாதிகாரியானாலும் ஒருவனால் முடியாத காரியங்கள். ஹிமாசலத்திலிருந்து கன்னியாகுமரிவரை நல்லபாதை போட வேண்டுமென்றால் எந்த ஒரு தனவானாலாவது முடியுமா? அநேக தனவான்கள் சேர்ந்து தான் போடவேண்டும். ஆனால் இத்தனவான்கள் ஒருவரையொருவர் அறியாமலுமிருக்கக்கூடும். அறிந்தாலும் தங்கள் தங்கள் தனத்தை நம்பிக்கொடுக்க இயலாது. துரைத்தனத்தார்களோ யாவருக்கும் பொதுவானவர்களானதால் யாரும் நம்பிக்கொடுக்க முடியும். அசாத்தியமான காரியங்களும் சாத்தியமாகும். சில விஷயங்களில், பொய்யும் குற்றமில்லாத நன்மையைச் செய்யுமானால் மெய்ம்மையின் குணத்தை யுடையதாகும் என்பதுபோல கடன் வாங்குவதும் மிகுந்த பிரயோசனத்தைத் தரக்கூடியதாகும். முதலில் அப்படிக் கடன் வாங்குவது பழுதில்லாத நன்மையைப் பயக்குமா என்று மாத்திரம் தெளியத் தெரிந்துகொள்ளவேண்டும்.

## LESSONS IN NATURE STUDY.
## SWALLOW.

### பிரகிருதி வித்யாப்யாஸம்:
### தூக்கணங்குருவி.

(ஒரு சிறுபர் அனுப்பியது.)

சென்ற வெள்ளிக்கிழமை யன்றையதினம் என் வீட்டில் ஒருவிசேஷம் நடந்தது. அப்பொழுது யான் என்வீட்டின் பின்பக்கம் சென்றேன். அங்கே ஒரு தென்னைமரமிருக்கின்றது. அந்தமரத்தில் என் வீட்டின் விசேஷத்திற்காக தோரணத்திற்கு பூவரிகொய்ய என் பாட்டனார் அதில் ஏறினார். அப்பொழுது நானும் மரத்தை நோக்கினேன். அதில் நானிதுவரை பார்த்தறியாத அழகுள்ள பல கூண்டுகள் தோற்றப்பட்டன. அதைப்பற்றி என் பாட்டனாரிடம் விசாரித்தேன். அவர் இவை தூக்கணத்தான் கூடு என்று சொன்னார். அம்மரத்தில் ஏழுகூடுகள் தொங்கின. அதில் ஒரு கூட்டில் குஞ்சின்றி வெறுங்கூடாயிருந்தது. அதனை என்பாட்டனார் எடுத்து எனக்குக் கொடுத்தார். நான் அதைப்பார்த்து சிட்டுக்குருவியொத்த இக்குருவிக்கி இவ்வளவு அழகுள்ள கூடு கட்ட யுக்தியுண்டானது கடவுள் செயலன்றி அதின் செயலல்லவென என்புத்தியில் மதித்துக்கொண்டு அக்கூடு எதினால் கட்டப்பட்டதெனக் கவனித்தேன். தென்னைமரத்தின் ஓலையின் வாரடையினாலும் சோளம் கம்பு என்னும் பயிரின் வாரடையினாலும் கூடு கட்டியிருந்தது. நம்நாட்டில் மிகுந்த நெசவு செய்பவர்களிருக்கின்றனர். அவர்கள் நெசவு செய்வதைக் கவனித்துபார்த்தாலும் நாம் கற்றுக்கொள்ளலாம். இப்பட்சி பின்னிய கூடும் அப்படியுறினும் நாம் கற்றுக்கொள்வதெளிதல்ல. அக்கூடு தலைகீழாகத் தொங்கிக்கொண்டிருப்பதாய் நமக்குத்தோற்றுகின்றது. அது மரத்தின் சிக்கலில் சேர்த்துப் பின்னி மழைவெயில் முதலியவைகளால் கெட்டுப்போகாதபடி தந்திரமாய்க் கட்டப்பட்டிரு

க்கின்றது. என் பாட்டனுர் எனக்குக் காட்டிய கூட்டைப்பார்த்த நாள்முதல் நான் அந்த தென்னைமரத்தைக் கவனித்துப் பார்த்து வந்தேன். பார்த்துவருகையில் ஜனவரிமீ 14உ திங்கட்கிழமையன்று ஒரு குருவியானது கூடுகட்ட யத்தனித்தது. நானதையே கவனித்துப் பார்த்துவந்தேன். மேற்படி மாசம் 26உ சனிக்கிழமை அந்த தூக்கணத்தான் அக்கூட்டை சரியாய்க்கட்டி அதில் சில களிமண்களை இலேசாய்வைத்து இரண்டொரு இறக்கைகளையும் வைத்திருந்தது. பிப்ரவரிமீ 3உ ஞாயிற்றுக்கிழமை அக்கூட்டில் முட்டையிட்டு இருந்தது. இந்த தென்னைமரம் சிறியதாயிருப்பதால் யான் அடிக்கடி பார்வையிடத் தோன்றிற்று. மற்ருநாளிரண்டு முட்டைகளிருந்தன. அம்முட்டையின்பேரில் ஆண் குருவி அடைகாத்துக்கொண்டால் பெண் குருவி இரைதேடப்போகிறதும் அக்குருவி வந்து அடைகாத்ததின்பின் ஆண்குருவி இரை தேடப்போகிறதுமாக இருந்தது. இப்படியாய் மார்ச்சுமீ 13உ வரையிருந்தன. யான் அன்றைபத்தினம் காலையில்போய்க் கூட்டைப் பார்த்தேன். முட்டைகளிரண்டுமிருந்தன. அன்று சாயந்திரம் பார்க்கும்பொழுது இரண்டு முட்டையினின்றும் இரண்டு குஞ்சுகள் பொரித்திருக்கக்கண்டு யான் என் பாட்டனுரிடம் சொன்னேன். இந்த வரலாறெல்லாமவர்கேட்டு அது நாற்பது நாள் முட்டையிட்டு ஆயினவுடன் குஞ்சு பொறிக்கும்; அது நாலு முட்டைகளுமிடும்: நாலுமுட்டைகளிட்டால் இரண்டு முட்டைகள் கூமுட்டைகளாய் விடும். இரண்டு முட்டைகளிட்டால் கூமுட்டையின்றிப் பொறிக்கும் என்ருர். நான் கவனித்துவந்தேன். குஞ்சுபொறித்தநாள் முதல் தினந்தோறும் அதன் தாய்தந்தை இரண்டும் ஒன்றுமாற்றி யொன்று வெளியேசென்று கம்புசோளம் நெல் முதலிய தானியங்களைப் பொறுக்கிக் கொணர்ந்துகொடுத்துப் பாதுகார்த்தன. அதில் பெண்குருவிதான் குஞ்சுகளை இடைக்கிடை வந்து பார்த்து இரைகொடுத்து வளர்த்தது. இந்த இரண்டும் ஆண் ஒன்று பெண் ஒன்றுதான் பொறிக்குமென்று என்பாட்டனுர் எனக்குச்சொன்னுர்.

இந்த இரண்டு குஞ்சுகளும் பொறித்த பதினேழாம் நாளன்றயதினம் சாயந்திரம் பார்க்கையில் வெளியே சிரஸைக்காட்டிக்கொண்டிருந்தன. மார்ச்சுமாதம் 30உ ஆகிய சனிக்கிழமையன்று இந்த இரண்டு குஞ்சுகளையும் தாய்க்குருவி கூட்டினுள் சென்று வெளியே தன் முகத்தினுல் தள்ளிற்று. உடனேதானே தானுங்கூடவே வந்து தரையில் கிடக்குந் தானியங்களைப் பொருக்கி தாய்க்குருவி குஞ்சுகளுக்கு ஊட்டி குதித்துக்குதித்து குஞ்சுகளுக்குப் பறக்கக்காட்டிற்று. அன்று அந்த இரண்டு குஞ்சுகளும் கொஞ்சந்தூரம் போகிறதும் பின் கீழே விழுகிறதுமாயிருந்தன. அன்று சாயந்திரம் அவை அம்மரத்தில் கூட்டில் சேராது மரத்தின் பக்கம் என் காரைவீட்டின் மேலிருந்தன. மறுநாள் முன்தினம்போலவே தாய் வந்து பறவை காட்டிக்கொண்டிருந்தது. அப்புறம் அதன் தந்தையாகிய ஆண் குருவியும்வந்து பறவைகாட்டி மற்ருநாள் பறந்தோடிற்று. அந்தக் குஞ்சென்று அடையாளந் தெரியும்பொருட்டு பாசியினுல் அந்தக் குஞ்சின் கால்களில் பின்னலிட்டு குஞ்சங்கட்டி வைத்திருந்தேன். அதுகளிரண்டும் பின்னும் அந்தஇடத்தினிலே அந்தமரத்தினில் ஒரு மட்டையில் தன்னினங்களைப்போல பெரிய குருவிகளாகி ஏப்பிரல்மீ 11-உ வியாழக்கிழமையன்று கூடு கட்ட ஆரம்பித்து அரைவாசி கட்டி இருக்கின்றது. இதிப்படி இருக்க என் வீட்டின் வாசலில் ஒரு பக்கிரி நாலு தூக்கணத்தான் குருவி கொண்டுவந்தான். அதுகள் பார்வைக்குச் சிட்டுக்குருவிபோலிருந்தாலும் மஞ்சள் வர்ணங்கலந்திருப்பதால் பார்வைக்கு மிகவும் அழகாயிருந்தது. அதில் ஒன்று நான் அவனிடத்தில்கேட்க அவன் என்னைப்பார்த்து அம்மா இந்தக் குருவியின் அருமையெனக்கும் என்னைப்போல வளர்ப்பவர்களுக்குந் தான் தெரியுமென்ருன். நானவனை அதன்

அருமை என்னவென்று கேட்க, அவன் சொல்லியதாவது: 'அம்மா நாம் சொன்னவைகளைக் கேட்கும். ரூபாயைக்கிணற்றில் போட்டாலுடனே எடுத்துவந்துவிடும். எந்த மரத்தினின்றும் இலைகளைக்கொய்து வரும்படி சொன்னாலும் கொய்துவரும். நான் எங்கே செல்லுகிறேனோ அங்கேயே விட்டுவிட்டால் பறந்து வந்துசேரும். இதனருமை பிரம்பவம்மா' என்று அவன் சொல்ல நானதின் மீதுற்ற ஆசையை இவ்வளவென்று வரையமுடியாது. பின்னும் நான் அந்தப் பக்கிரியைப்பார்த்து எந்த மரத்தினிலும் இலைபரித்துக்கொண்டுவரும் என்றனையே பனைவகையரா, தென்னை, வாழை இப்படிப் பலத்த காம்புள்ளவைகளில் கொண்டுவருமா என்ன, அவைகள் தவிர மற்ற இலைகளைக்காம்புடன் கொண்டுவரும். அந்த இலைகளையும் காம்பன்றி கரித்தும்வரும் என்றான். நான் அவனை நோக்கி இன்று உனக்கு என்ன சம்பாத்தியங் கிடைக்குமென்றேன். அவன் கடைகளுக்குப்போனால் அரைக்கால் ரூபாய் கிடைக்கும்; ஊர்க்காட்டில் சாப்பாடு கிடைக்கும் என்றான். நான் அவனைநோக்கி இன்று உனக்குச் சாப்பாடு செய்துவைத்து கால்ரூபாய் தருகிறேன். அந்தக் குருவியின் வேடிக்கைகளைக் காண்பிக்கவேண்டுமென்று கேட்டேன். உடனே அவன் சம்மதித்து அன்று என் வீட்டினிலே இருந்து அந்தக் குருவிகளை ஒன்றொன்றாய் உயரப்பறக்க விட்டுவிட்டு வெளியே சென்றான். அந்தக் குருவிகள் அவன் சிரசின் நேராகப் பறந்து ஒரு திண்ணையில் உட்கார அதுகளும் இறங்கி அவன் சிரசிலும் மடியிலும் கையிலுமாய் உட்கார்ந்தன. அவன் அவைகளுக்குச் சில இரைகளங்கே கொடுத்துவிட்டு மறுபடியும் பறக்கச்செய்துவிட்டு என் வீட்டிற்கு வந்தான். அந்த நாலு குருவிகளும் முன்போலவே வந்து இறங்கி இருந்தன. உடனே அவன் என் வீட்டின் பக்கத்திலிருந்த வேப்பமரத்தில் இலைகொய்து வரும்படி ஒவ்வொரு குருவியாய் கையினில் வைத்துச் சைகை காட்டினான். ஒவ்வொரு குருவியும் விருட்டெனப் பறந்து ஒவ்வொரு தடவையும் ஒவ்வொரு குருவியும் ஒவ்வொரு இலைகொணர்ந்ததுகள். ஒவ்வொரு குருவியும் சுமார் 10-தடவைசென்று கொணர்ந்திருக்கும். இப்படி வேடிக்கைகள் காட்டிய பின் குருவிகள் நாலுக்கும் அந்தப் பக்கிரி இரைகொடுத்தான். ஒரு அரைமணிநேரம் சென்றபின் என்வீட்டிற்கு அடுத்தவீட்டில் ஒரு கிணறு இருக்கிறது. அந்தக் கிணற்றின் பக்கம் என்னையும் அங்கிருந்த என் மித்திரர்கள் சுற்றத்தாரையும் கூட்டிச்சென்று தன் கையிலிருந்து அரைக்கால் ரூபாயை எங்கள் யாவருக்கும் காண்பித்து வலதுகையில் ரூபாயைவைத்து இடதுகை மணிக்கட்டின்மீது ஒரு குருவியை நிறுத்தி குருவிக்கு ரூபாயைக் காட்டி கிணற்றிலெறிந்தான். அந்தக் குருவி ரூபாய் நீரில் விழுமுன்னம் ஒடித் தன் வாயினாலந்த ரூபாயைப் பிடித்துக்கொண்டு வந்து அவன் கையில் வைத்துவிட்டுக் கையிலிருந்த இரையைத் தின்றுவிட்டு விளையாடிக்கொண்டிருந்தது. இப்படி ஒவ்வொரு குருவியையும் தனித்தனியே இவ்வேடிக்கை செய்யும்படி செய்து காண்பிவித்தான். இதை யான் நோக்கினமாத்திரம் என்னிருதயக்களிப்பு இவ்வளவெனச்சொல்ல அடங்காது. நான் அந்தப் பக்கிரியினிடம் அவனுக்குத் தருகிறதாய்ச்சொல்லியிருந்தபடி $\frac{1}{4}$ ரூபாய்கொடுத்து அவனுக்கு அன்று சாப்பாடும் செய்துவைத்தேன். அவன் சந்தோஷமாயிருக்கும் சமயம் நானிந்தக் குருவிகள் எவ்விடத்தின்கண் அகப்பட்டனவென வினவ அவன் இந்தக் குருவிகள் கருவேலமரம் தென்னைமரம், பனைமரம் இவைகளில் கூடு கட்டியிருக்கும். அதுகளைப்பார்த்துச் சிறு குஞ்சினிலே யெடுத்தேன் என்றான். நான் அவனை இவை வேறு இடங்களில் கூடுகட்டாதா என்று கேட்க அவன் வேறு மரங்களில் அது கூடுகட்டிச் ஜாஸ்தியாய்ப் பார்த்ததில்லை என்றான். உடனே 'இந்தக் குருவிகள் உன்னிடம்வந்த பின் இப்படித் தொழில்கள் பழகினவா அல்லது அதற்கு

இயற்கையா'என வினவ? அவன் அம்மா இந்தக் குருவிகளைச் சிறு குஞ்சினிலே யெடுத்து இப்படிப்பட்ட வேடிக்கைத்தொழில்கள் செய்து பழக்குவது என்றான். நானுடனே இவைகள் மனிதன் சொன்னவைகளைக் கேட்கவும் செய்யவும் செய்கின்றனவே இவை முட்டையிட்டுக் குஞ்சுபொறித்து வளர்த்த தாய்தந்தைக் குருவிகள் சொன்னபடியும் கேட்கவேண்டுமே யென்று •அந்தப் பக்கிரியைக் கேட்டேன். அதற்கவன் எந்தக்காலத்தில் யார் இரை கொடுக்கிறார்களோ அவர்கள் சொன்னபடி கேட்கும். இப்பொழுது அதன் தாய் தந்தையர்களாகிய குருவிகளில் ஒன்று இரை கொடுத்தாலதின் சொல்லையும் இப்பொழுது கவனிக்குமென்றான். நான என்புத்தியில் இதற்குப் பகுத்தறிவில்லை; ஆகையால் தான் தாய்தந்தையரைக் கவனிக்கவில்லையென்று மதித்தும் இவைகளை யோசிக்குங்கால் சாக்ஷாத்காரமாகிய எம்பெருமான் திருவிளையாட்டென மதித்தேன். அந்தப் பக்கிரியிடமிருந்த குருவியில் ஒன்றை யான் முன்போலவே அதனை யாசையால் கேட்டேன். அவன் 'என்னை அது வளர்க்கிறது நானதைவளர்க்கிறேன்' என்று சொல்லிக்கொண்டு குருவிகள் நாலையும் கொண்டுச் சென்றனன். என்வீட்டின் பின்பக்கமிருந்த தென்னைமரத்தில் தினந்தோறும் மிகுந்த தூக்கணத்தான் குருவிகள் சேர்ந்து சம்பாஷித்துக்கொள்வதைப்பார்த்து நான் என் வீட்டிலுள்ள வேலைச்சமயம்போக மற்ற வேளைகளில்மிகுகவனமாய்ச் சந்தோஷமடைந்திருக்கின்றேன். எனக்குச் சில காலம் வியாகூலம் வந்து மனவருத்தமுற்றிருக்கையில் வீட்டின் பின்பக்கம் தென்னைமரத்தில் அதின கூடுகளையும் அவைகள் சம்பாஷிப்பதையும் நோக்கினவுடனே என் மனம் களிப்புற்றுக் கவலை நீங்கிவிடும். இந்த • தூக்கணத்தான் குருவிக்கு ஆயுள் என் பாட்டனாரிடமும் மற்றும் பக்கத்தினிலும் விசாரித்ததில், வயது நூறு; இதிலிடையே பாம்புக்குச் சித்தனாரிடத்தில் சொல்லியிருக்கின்ற ஆபத்துகள் எத்தனையோ அதுபோல அதற்குமுண்டாம். அந்த அபமிருத்துகள் நீங்கினால் காலமிருத்தாகிய வயது நூறும். இதனை நான் கவனிக்குங்கால் யாவரும் இப்படி வேடிக்கை செய்யும் இந்த பட்சிகள் அன்பையுட்கொள்வதுண்டு.

அதனால் ஒரு கியாபகம் எனக்குண்டாயிற்று. அதாவது நாம் நம்மை ஆதரிப்பவர்களுக்குப் பணிந்து நடந்தும் நியாயாதிபதிக்கடங்கியும் ஸ்ரீகளும் புமான்களும் சுற்றத்தாருக்கு அடங்கி நடக்கவேண்டியது முக்கியம். பகுத்தறிவில்லாப் பக்ஷியைப் பார்க்கிலும் பகுத்தறிவுள்ள மனிதர்களாகிய நாம் அப்படி நடக்காத விஷயம் கடவுளருளின்றியும் உலகதூஷணைக்கும் நரகத்திற்கும் ஆளாவோம். உணவின்றியும் அலையவும் நேரிடும். ஐயா, நான் பெண்பால், என்வசனங்களிலும், நடையிலும் எழுத்துக்குற்றங்கள், சொற்குற்றங்கள் எவையுரினும்,

"பூமாலை வாங்கிப் புனைபவர்கள் நாரதனைத்
தாமாகாதென்று சற்றுந்தள்ளா ரதுபோல"

இந்த நடந்த அதிசய வர்த்தமானங்களையறியுங்கள். நீங்களறியாதவைகளல்ல. நான் பார்த்தமட்டும் அதிசயமாயிருந்தமையால் இந்நிரூபம் வரைந்தேன்.

---

## சிவனும் உமையும்.

### ஆசிரியப்பா.

---

Shiva & His Consort (For Recitation.)

உலகம் யாவும் ஒருங்கே படைத்திட்டு
அரியணை* யிருக்கும் அரசன் முதலாக்
கூழைக் குடிக்கும் ஏழையீ றுவுள
அவரவர்க் கேற்ற தொழிலும் உணவும்
அறிந்து கொடுத்தான் அரன்முன் நாளில்
செல்வர்க் கமுதும் அல்லர்க்குத்தினையும்
இல்லந் தோறும் இரந்து[1] குடிக்கும்
துறவிக் கோடும் ஒருபிடி அன்னமும்
ஆவிற் கறுகும்[2] ஆனைக்[3] காலும்

---

* சிம்மாசனம்.

1. பிச்சையெடுத்து. 2. அறுகம்புல். 3. ஆனைக்கு+ஆலும்.

புலிக்கு மாடும் பூனைக்கெலியும்
தெரிந்து தந்தான் சிவபெருமானே
படைத்த உயிர்களைச் சமமாய்ப் பாவித்
துயர்வோ தாழ்வோ ஒன்றும் எண்ணிலன்
பரமன் அன்பொடு பிராணிகள் யாவையும்
தினமும் ஊட்டி வளர்த்தல் கண்டு
உமையவள் ஒருநாள் கிளியொன் றெடுத்துப்
புடவையில் வைத்துப் பொதிந்து பின்னர்
விளையாட் டாக நாதனைப் பார்த்து:
" ஆயிர உயிர்களுக் கன்ன மளிக்கும்
" அரனே கேளாய் யான்சொல்வதனை
" சிருட்டியி லடங்கிய செந்து வொன்றினை
" ஊட்டினை யல்ல உணர்வையோ அதனை ?
என்ன உரைப்பச் சிவபெருமானும்:
" ஆசைக் கிசைந்த அணங்கே கேளாய்.
" எல்லா வுயிர்க்கு மீந்தேன் உணவுன்
" ஆடையில் மறைத்த அழகுறு கிளிக்கும்
" ஈந்தே னுணவே[1] மாந்தேன் அல்லேன்"—
எனவிடை பகர்ந்தனன் இடப[*] வாகனன்.
†முக்கணன் சொன்ன அக்கண மதனில்
மடியில் மறைத்த கிளியை யெடுப்ப
உத்தம உமையாள் [2]தத்தைதன் மூக்கில்
கொவ்வைக் கனியைக் கவ்வக் கண்டு
மனதிற் பயந்து சிவனைப் பணிந்து
" அண்டம் அனைத்தும் ஆளும் அரனே [யும்
" எவ்வயின்[3] இருப்பினும் ஒவ்வொரு உயிரை
" அவ்வவ் வேளையில் அருத்துவ தறியா[4]
" தாடையில் மறைத்தேன் மூடத் தனத்தால்,
" அடியாள் பிழையை அருளொடு பொறுப்
[பை
" தெரியா திழைத்த‡ சிறுபிழை மறப்பை "
என்ன மொழிந்தனள் ஏந்திழை தாழ்ந்தே.

---

1 உணவு + ஏமாந்தேன் என்று பிரித்து அருத்தம் செய்துகொள்ளவும். 2 தத்தை = கிளி. *விருஷபம்.

† மூன்று கண்களுடையவன்: (இயற்கையாயுள்ள இரண்டு கண்களும் நெற்றிக்கண்ணும்) அதாவது சிவன்.

3 எவ்வயின் = எவ்விடம். 4 அருத்துவது + அறியாது + ஆடையில். (அருத்துவது = உண்பிப்பது).
‡ செய்த.

## THE CHILDREN'S PAGE.

### LAKSHMI AND SANEESVARA.

## சிறுவர்க்கான பக்கம்.

### லக்ஷ்மியும் சனிபகவானும்.

ஒரு காலத்தில் லட்சுமிக்கும் சனீஸ்வர பகவானுக்கும் தங்களில் யார் சாமர்த்தியசாலி என்பதைப்பற்றி விவாதம் நடந்தது. லட்சுமியோ தான் செல்வத்துக்கெல்லாம் *அதிகாரியாயும், சந்தோஷத்திற்கெல்லாம் காரண பூதமாயுமிருப்பதால் தானே சாமர்த்தியசாலி யென்றாள். சனீஸ்வரனோ ஒருவனை தலையெடுக்கவொட்டாது தவிக்கச்செய்வதாலும், அவன் பட்டபாட்டைக் கண்டு பயந்து பய பக்தியுடன் தன்னையே துதிக்கப்பெறுதலாலும் தனக்குமிஞ்சியவன் கிடையாதென்றும் ஆதலால் தானே சமர்த்தனெனவும் வாதித்தான். இவர்களிப்படி "தென்றல் முற்றிப் பெருங்காற்றானது" போல் பலமான சண்டை பிடித்துக் கொண்டிருந்தமையால் இவர்களுக்கு மத்தியஸ்தமாய்வந்து சமாதானப்படுத்த ஒருவரும் துணியவில்லை. முடிவில் இருவரும் தங்களுக்குத்தெரிந்த "நற்குணங்களையே அணிகலனாகப்பூண்ட நரேந்திரன்" என்னும் அரசனிடம் செல்வதாக ஒப்புக்கொண்டு அவ்விடமேகினார்கள். ஜயபுரி அரசனான நரேந்திரன் இவர்களைக்கண்டு ஆசார உபசாரம் செய்து நின்றான். அப்போது இருவரும் தங்கள் விவாதத்தை விஸ்தரிக்க, அரசன் யோசித்து "நல்லது நாளைவாருங்கள் உங்களுக்குப் பதிலளிக்கிறேன்" என்றான். இருவரும் தத்த மிருப்பிடமேகினார்கள்.

மறுநாள் நரேந்திரன் கொலுக் கூடத்தில் ஒரு தங்க சிம்ஹாஸனமும் வெள்ளி சிம்ஹாஸன மொன்றும் போடப்பட்டு தகத்தாயமாய் ஜொலித்துக்கொண்டிருந்தது. அப்போது இவ்விரு தேவதைகளும் அங்கு பிராப்தமாக அரசன் வந்தனைவழிபாடுசெய்து உட்காரும்படி சிம்ஹாஸன மிருக்குமிடத்தை கையால் சுட்டிக்காட்டினான். அப்போது பெருந்தன்மையான முகமும், புன்சிரிப்பு தவழ்ந்த உதடோடும் கூடிய லட்சிமியானவள் தன் அந்தஸ்துக்குத் தக்கவண்ணம் பொற்சிம்மாசனத்தில் எழில்பெற பொலிவுற்று விளங்கினாள். சனீஸ்வரனோ வெள்ளி சிம்மாசனத்தில் உட்

கார்ந்து "அரசனே! இதில் இப்போது யார் திறமைசாலி! செப்புவாய்" என அரசனை நோக்கி வினவினான். அரசன் இருகரங்களையும் சிரமேற்கூப்பி "நான் சொல்வதைக் கேட்டு கோபித்துக்கொள்ளாமல் மன்னிக்கும்படி கோருகிறேன். வெள்ளி சிம்மாசனமானது பொற்சிம்மாசனத்தைக் காட்டிலும், தாழ்ந்தது என்பது தங்களுக்கே தெரியும். மேலும் இதில் இன்னார் தாழ்ந்தவர் என்று நான் சொல்லாமலே தாங்களே தெரிந்துக் கொள்ளலாம்" என்றான். இதைக் கேட்டவுடனே சனீஸ்வரபகவான் கண்களில் தீப்பொறி பறக்க உற்று நோக்கி, "அரசனே! என்னை யாரென்று நினைத்தாய்? சப்தலோகங்களும் கிடுகிடென்று நடுங்கும்படி செய்யவல்ல என்னை ஒரு அற்ப அரசன் நீ! சொல்லப் போய்விட்டதா? நல்லது என் சாமர்த்தியத்தைப் பார்த்து பின்னாடி நீயே தெரிந்துக் கொள்ளும்படியான உத்தம குணத்தைக் கற்பிக்கிறேன்" என மறைந்தான். லட்சிமியுமெழுந்து "அரசனே! அதைரியப்படாதே? நான் உன்னைக் கைவிடேன். அவன் அட்டகாசங்களெல்லாம் கொஞ்ச காலத்துக்குத் தான். இதற்காக உன்மனத்துக்கு சஞ்சலத்தையும் வருவித்து உன்உத்தம குணத்தைக் கைவிடாதே" என லட்சிமியும் அந்தர்த்தானமாகினாள்.

*  *  *  *  *

கலியின் கொடுமையே கொடுமை! சிறிது நாட்களுக்குள்ளாக நரேந்திரன் நாட்டில் பஞ்சம் அதிகரித்தது. ஜலம் நிர்ஜலமாய்ப் போய்விட்டது. கொள்ளை நோயும், திருட்டும், பூகம்பமும் உண்டாகி எண்ணிறந்த ஜனங்கள் மாண்டார்கள். பசியினால் வருந்தி அநேகர் இறந்தார்கள். ஓர் வேற்றரசன் வந்து நாட்டைக் கைப்பற்றிக்கொண்டான். இது செய்தியறிந்த நரேந்திரன் என்னும் அரசனும் அவன் மனைவி சுகுணாவும் இருந்த கொஞ்ச நஞ்ச சொத்துக்களையும் மூட்டை கட்டிக்கொண்டு மத்தியான வெயிலில் கால்கடுக்கப் புறப்பட்டார்கள். ஐயோ! சுகுணா அந்தப்புரத்தில் பத்தடி எடுத்தடி வைத்திராளே! ஆகா! அவள் மிருதுவான பாதங்கள் என்னமாய் நோகுமோ! நாட்டையுமிழந்து கல்லுமுள்ளும் செறிந்த காட்டில் தன் மனைவியும் தானும் கால்கடுக்க நடந்து செல்லவும் கடவுள் அமைத்தாரே? என்று அரசன் அங்கலாய்த்துக்கொண்டு கண்ணீர் ஆறுகப்பெருக செய்வதின்னதெனவறியாது ஓர் ஆற்றினிடமாகப் போந்தனர். அங்கே ஒரு படகில் ஒரு கிழவன் உட்கார்ந்திருந்தான். அக்கரைக்குச்செல்ல ஆற்றைக் கடந்துபோக வேண்டிநேர்ந்தமையால் அரசன் படகோட்டியை நோக்கி "அப்பா! நாங்களிருவரும் அக்கரைக்குச் செல்லவேண்டியவர்கள். ஆதலால் அக்கரையில் எங்களை சேர்ப்பிப்பாயானால் உனக்கு நாங்கள் வைத்திருக்கிற நகைகளில் நல்லதாய்ப் பார்த்து மிகுந்த விலையுள்ள நகையொன்றைக் கொடுக்கிறோம் என்றான். அதைக்கேட்ட படகோட்டி "ஓ! ஓ! அதுகூடாது. என்னுடைய படகு ஒரு ஆள்தான் கொள்ளும். ஆதலால் முதலில் உம்முடைய மூட்டையைக் கொடும். அதை அக்கரைசேர்த்து பின்பு உங்களையும் சேர்ப்பிக்கிறேன்" என்றான். இதைக்கேட்ட அரசனும் சம்மதித்து "மூட்டையை நீட்ட", மூட்டையையும் காணோம், படகோட்டியையும் காணோம், ஆற்றையும் காணோம், ஒன்றும் காணவில்லை. "ஆகா! இதுவும் அக்கலியின் கூத்தல்லவா? என அரசன் வருந்தி பின்னும் சில தூரம் நடக்க மாளாது தத்தளித்துத் தவிக்கும் தன்மனையாளையுமழைத்துக் கொண்டேகினான். இவர்களோ இரண்டு நாட்களாய் சாப்பிட்டவர்களல்லர்; பசியோ பிராணன்போகிறது? என்னசெய்வார்கள்? அங்கிருந்த மீன் பிடிப்போரிடம் அரசன் சென்று கெஞ்சாதவண்ணம் கெஞ்சி ஒரு மீன்வாங்கி சமைக்கத் தன் மனைவியிடம் கொடுக்க பாங்கிகளால் சமைக்கப்பெற்று சுகமாகசாப்பிட்டுக் காலம்கழித்த ராஜபுத்திரி சமைக்கவழி தெரியாது தியங்கினும் கூடியமட்டில் மனதைத் தைரியம் பண்ணிக்கொண்டு அங்கே கிடந்த மட்டை, சருகு முதலானவைகளைச் சேகரித்து மூட்டம்போட்டுப் பார்க்க மீனெல்லாம் கரியாகவிருந்தது. அதைக் கண்டு வருந்தி ஆற்றிற்குச்சென்று அங்கக் கழுவலாமென்று போனால் ஆற்றுக்குள் மீன் ஒரே குதியாய்க் குதித்துச்சென்றது. இதைக் கண்டு சுகுணா மனமாற்றாது கோவென்றலறினாள். அரசன் ஓடிவந்து உள்ளதையறிந்து வருந்தி "இனி இவ்விடம் இருக்கலாகாது" என்று பயணப்பட்டு ஒரு குக்கிராமத்துக்கு வந்துசேர்ந்தனர். அங்கே பிழைப்பு நடக்க வேண்டி அரசன் கட்டைவெட்டி ஜீவனம்

செய்ய நேர்ந்தது. ஒருநாள் கட்டை வெட்டியபின்பு ஆயாசம்தீர மரத்தடியினில் உட்கார்ந்து தனக்குச்சம்பவித்த இடுக்கண்களையெல்லாம் எண்ணி எண்ணி மனம் புண்ணுவான்.

இப்படியாக சிலகாலம் செல்ல, ஓர் நாட்காலமே வழக்கம்போல் கட்டைவெட்ட நரேந்திரன் அடவிக்குச்செல்ல, சுகுணு மட்டும் வீட்டிலிருந்தாள். இப்படியிருக்க அன்று காலமே ஒரு கப்பல் வந்து இக்கிராமத்தருகில் வரவும் என்னமுயற்சி பண்ணியும் செல்லாமல் நின்றது. இதைக்கண்டு அக்கப்பல் வர்த்தகன் மனம்படி வைதியிருக்க, ஒரு பிராமணன் ஜோசியன்போலும் வர்த்தகனிடம் வந்து "அப்பனே! சுகுணு என்றோர் பெண் இக்கிராமத்தில் வசிக்கிறுள், அவள் வந்து உன் கப்பலைத்தொட்டால் இது நகரும்" என்றான். உடனே வர்த்தகன் அக்கிராமத்துக்குள்ளோடி அவ்வீட்டின் கதவைத்தட்டி சுகுணுவெளி வரவும் நடந்ததைச் சொல்லி கிருபைகூறும்படி கெஞ்சினன். "தன்புருஷன் வீட்டிலில்லாத சமயத்தில் போவது கூடாது" என்று நினைத்து முடியாதென்முள். கடைசியாக அக்கம் பக்கத்தார் கேட்டுக் கொள்வதிலும், தன்னேடொத்த பெண்கள் வருந்தி பிரார்த்திப்பதாலும், உயிரைக்காக்க வேண்டுமென்ற ஓர் ஜீவகாருண்ணியத்தினுலும் துணிந்து போய்க் கப்பலில் பாதி ஏறினவுடனே கப்பல் வாயு வேகமனோவேகமாய்க் கரை கண்ணுக்கெட்டாத தூரத்துக்கிப்பால் வந்துவிட்டது. என்ன செய்வள் சுகுணு? தன்னைத்தானே நோகிறுள். வர்த்தகனைக் கண்டபடி திட்டுகிறுள். தன் புருஷனைப் பற்றி வருந்துகிறுள். இன்னது செய்வது என்று தெரியாது தயங்குகிறுள். வர்த்தகனே அவள் தன் கப்பலிலிருக்கும் வரை அபாயமில்லையென்றும் அவள் நல்ல லட்சணமாயிருப்பதால் ஊருக்குச்சென்றதும் கல்யாணம் செய்துகொள்ளலாமென்று மனப்பால் குடித்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறுன். நிற்க, நரேந்திரன் சங்கதியைக்கொஞ்சம் கவனிப்போம். நரேந்திரன் வீட்டிற்குச் சாயங்காலம் வந்தான். தன் அருமை மனைவியைக்காணேம். அவன் மனம் பட்டபாட்டை என்னென்போம்? ஆ! "மனையாளில்லா வீடு மயானமென்பார்களே? அது சரியாகப்போயிற்றே என்று அங்கிருந்தவர்களை விசாரித்து சமுத்திரக்கரை சேர்ந்து பார்க்க இவன் கண்ணுக்கு ஒன்றும் தென்படவில்லை. "ஐயோ! தெய்வமே! இன்னுமா சோதனை?" என்றேங்கிச்செய்வதியாதென வறியாது ஒருநகரத்தில் இராஜவீதி வழியாய்ச் செல்ல அங்கே ஒரு கொட்டகையில் ஏகக்கூட்டமாயிருந்தது. பெரிய அரசர்களும், கீர்த்திமான்களும், ஸ்தானுதிபதிகளும் நிரம்பிய கும்பாயிருந்தது. அவர்களோடு இவனும் சேர்ந்து நின்றுகொண்டிருந்தான். அப்போது அவ்வூராரும் அரசன் குமரி குணமணி தன்கையில் மாலையையெடுத்துக் கொண்டு யாரையும் ஏறிட்டுப் பாராது இவனண்டை வந்து இவன் கழுத்தில் மாலையைப்போட்டாள். உடனே விவாஹம் வெகு விமரசையாய் நடத்தப்பட்டு நரேந்திரனுக்கு முடிசூட்டும் வைபவமும் ஒருங்கே நடந்து தம்பதி சமேதராய் வாழ்ந்து கொண்டிருக்கையில் "சுகுணுவை தேடும்பொருட்டு முன்னமேயே திட்டம்செய்தனுப்பப்பட்ட சேவகர்கள் அவ்வர்த்தகனையும், சுகுணுவையும், அரசன் முன்னிலையில் கொணர்ந்து நிறுத்தினர். சுகுணு தன் நாயகனைக்கண்டதும் புளகாங்கிதம் கொண்டு அரசன் பக்கலில் அடைந்தாள். அரசன் வர்த்தகனுக்குத் தக்க சிட்சை விதித்துத் தன் மனைவி விரதமிருப்பதாகப் பொய்புகன்று தன் மானம் காத்துக்கொண்டதையும் கேள்வியுற்று, தன் மாமனரிடம் சகல சங்கதிகளையும் செப்பி அவரது அருளையும் பெற்று, கொஞ்சகாலத்திற்குள்ளாக படையெடுத்து மீளவும் தனது முந்தின நாட்டையும் வசப்படுத்திக் கொண்டு சுகமே வாழ்ந்தனன். அஷ்டலட்சுமிகளும் அவ்வூரிலேயே வாசஞ் செய்துக் கொண்டிருந்தார்கள்.

இக்கதையால் நாம் தெரிந்துகொள்ள வேண்டிய தென்னவெனில்,

"குடை நிழலமர்ந்து குஞ்சரமூர்ந்தோர்
நடைமெலிந்தோரூர் நண்ணினு நண்ணுவர்"

என்றபடி மகாமண்டலேசுவரனுயினும் அவனும் தனது நாட்டையுமிழந்து கஷ்டத்தை யடைவானென்றும்,

"அறத்திடு பிச்சை கூவியிரப்போரிருந்து
அரசாளினுமாளுவர்"

என்றவாறு ஒரு எளிய பிச்சைக்காரனுனும் திடீரென்று நன்னிலைமைக்கு வந்து செங்கோலோச்சுவானென்றும் ஆதலால் மனிதனுக்கு சுகம், துக்கம், இரண்டும் சமமாதலால் இதற்காக வருந்தாது எந்நாளும் நிர்ப்பானந்தத்தோடு நற்குணங்களைப் பூண்டு பக்திமார்க்கத்திலொழுகி முத்தியடைவோமாக—என்பதாம். சுபம்.